

Acc. NO. 26001.

உ

கணபதிதுணை

திருச்சிற்றம்பலம்

# சைவசாஸ்திரபரிபாலனம்



| தொகுதி உ | விக்கிரமவருஷ ஐப்பசிமீ 1940 அக்டோபர் | பகுதி உ |
|---|---|---|



பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே.

## இடபாரூடர்

நிமிஷம் பதினைந்து கொண்டது ஒரு காஷ்டையாகும். காஷ்டை முப்பது கொண்டது ஒரு கலையெனப்படும். கலை முப்பது கொண்டது ஒரு முகூர்த்தகாலமாம். முகூர்த்தமென்பது இரண்டு நாழிகை. முகூர்த்தம் முப்பது கொண்டது இராப் பகலாகிய ஒரு நாள். நாள் பதினைந்து கொண்டது ஒரு பக்ஷம். பக்ஷம் இரண்டு கொண்டது ஒரு மாசம். மாசம் ஆறு கொண்டது ஒரு அயனம். அயனம் இரண்டு கொண்டது ஒரு வருஷம். இம் மனுஷவருஷம் ஒன்று தேவர்களுக்கு ஒரு நாளாம். தேவர்களுக்கு உத்தராயணம் பகலும் தக்ஷிணாயனம் இராத்திரியுமா யிருக்கும். மனுஷவருஷம் முந்நூற்றறுபது கொண்டது தேவர்களுக்கு ஒரு வருஷமாம். தேவவருஷம் பன்னீராயிரங் கொண்டது ஒரு சதுர்யுகமாம். கிருதயுகத்தின் கால அளவைக் கணிக்குமிடத்து ச,அ00 தேவவருடம் எனவும், திரேதாயுகத்திற்கு ங,கூ00 தேவவருடம் எனவும், துவாபரயுகத்திற்கு உ,ச00 தேவவருடம் எனவும், கலியுகத்திற்கு க,உ00 தேவவருடங்களாகு மென்றும் கூறுவர். இங்ஙனம் தேவவருடங்களால் அளவை செய்யப்பட்ட யுகங்க

ளுக்கு மானுடவருடத்தைச் சொல்லுங்கால் கிருதயுகத்துக்கு கஎ,உஅ,000 வருடமும், திரேதாயுகத்துக்கு கஉ,சுசு,000 ஆண்டும், துவாபரயுகத்துக்கு அ,சுச,000 ஆண்டும், கலியுகத்துக்கு ச,ளஉ,000 ஆண்டுமாம். இந்த நான்கு யுகங்கள் கொண்ட காலமே ஒரு சதுர்யுகம்.

இப்படிச் சதுர்யுகம் ஆயிரம் திரும்பினல் பிரமாவுக்கு ஒரு பகலாகும்; பின்னும் ஆயிரம் திரும்பினல் பிரமாவுக்கு ஓர் இராத்திரியாகும். ஆகவே, இரண்டாயிரம் சதுர்யுகங் கொண்டது பிரமாவுக்கு ஒரு நாளெனப்படும். அந்த நாள் முப்பது கொண்டது ஒரு மாசமும், அது பன்னிரண்டு கொண்டது ஒரு ஆண்டும் ஆகும். இப்படி நூறு வருஷம் கழிந்தால் பிரமாவினுடைய ஆயுள் நீங்கும். அது விட்டுணுமூர்த்திக்கு ஒரு நாளாகும். இவ்வாறே விட்டுணுவினுடைய ஆயுளும் கழியும். கழியவே, உயிர்களும் அண்டங்களும் அக்கினியால் அழியும். உலகமெல்லாம் சுடலையாய்ப் பரிசுத்தமுடையதாய்த் தோன்றும். அந்த மயானத்தில் பரமசிவன் பார்ப்பதி அம்மையார் காணத் திருநிருத்தம் செய்து உலாவுவர். அந்த அக்கினிப் பிரளயத்தில் தருமதேவதை அஞ்சி, யாம் இவண் இறப்போம்; இனிச் செய்வதென்னை? என்றுலோசித்துச் சிவசன்னிதியை அடைந்து, "மகாதேவரே, சகத்துக்குப் பிரபுவே, ஈசானரே, சரணடைந்த என்னைக் காத்தருளுக; அடியேன் இறவாதிருத்தலையும், வலிமையையும், தேவரீருக்கு வாகனமாம் பேற்றையும் தந்தருளுக" என்று பிரார்த்தித்தது.

'தொடருந் தொண்டரைத் துக்கந் தொடர்ந்துவந்—தடரும் போதரு ளுயருள் செய்'யும் சிவபிரான் இடபத்திற்கு இறவாமையையும், வாகனமாய்த் தம்மைத் தாங்கும் பேற்றையும், ஒப்பற்ற வலிமையையும், அன்பையும், மெய்புணர்வையும் கொடுத்துப் பின்னரும் திருவாய்மலர்ந்தருளுகின்றுர்.

"தூயோனே! கிருதயுகம் முதலிய நான்கு யுகங்களிலும் தருமத்தின் றன்மை இது என்று யாவரும் அறியும்படி முறையே நான்கும், மூன்றும், இரண்டும், ஒன்றுமாகிய கால்களைப் பூமியில் ஊன்றிச் சஞ்சரிக்குதி; உன்னிடத்தில் நாம் எக்காலமும் நீங்காதிருப்போம்; நீயும் நம்மை வந்தடைந்து வாகன

மாய்த் தாங்குதி. நம்முடைய தொண்டர்கள் இயற்றுகின்ற பாவமும் புண்ணியமாம்; நம்மைப் புறக்கணித்தவர்கள் பண்ணிய புண்ணியமெல்லாம் பாவமாம். இது திண்ணம். நம்மிடத்து மெய்யன்புடையவர்கள் செய்யும் பாவமும், அன்பில்லாதவர் செய்யும் புண்ணியமும் மாறி, அறமும் மறமுமாவது யாம் உன்னிடத்து உடலில் உயிர் போல வியாபித்திருத்தலினாலேயாம். உன்னிடத்து நாம் என்றுமுள்ளோம்; நீயும் இடபவாகனமாய் நம்மிடத்திருக்குதி; இந்த வடிவையன்றி மானிட வடிவத்தை எடுத்தும் நம்மைப் பூசிப்பாய்'' என்று தருமதேவதைக் கருளிச் செய்து அதனை வாகனமாகக் கொண்டருளினார். அந்த நாள் முதலாகப் பரமசிவன் தம்மை மெய்யன்போடு தியானிக்குந் தொண்டர்களுக்கு வரம் கொடுக்கும்படி அந்த ரிஷபவாகனத்தின்மேல் இவர்ந்து தோன்றுவர்.

இது கந்தபுராணம் தக்ஷகாண்டத்திற் கூறப்பட்டது.

சிவபெருமான் இடபவாகனத்தில் எழுந்தருளி வந்து அருள் செய்வாரென்பது "நமோ பப்லுசாய" [இடபாரூடர் பொருட்டு நமஸ்காரம்] என்று யசுர்வேதமும், "விடையேறியில் பலிகொள்வான்" என்று திருநாவுக்கரசுநாயனார் தேவாரமும்,

ஊர்வதோர் விடையொன் றுடையானை
யொண்ணுதற் றனிக்கண் ணுதலானைக்
காரதார் கறைமா மிடற்றானைக்
கருதலார் புரமூன் றெரித்தானை
நீரில்வாளை வாால் குதிகொள்ளு
நிறைபுனற் கழனிச் செல்வநீடூர்
பாருளார் பரவித் தொழநின்ற
பரமனைப் பணியா விடலாமே.

என்று சுந்தரமூர்த்திநாயனார் தேவாரமும்,

"ஏறேறிய விறைவர்க்கிட மிடும்பாவன மிதுவே" என்று திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தேவாரமும் கூறுகின்றன.

சிவபெருமான் தருமதேவதையாகிய இடபத்துக்குத் தம்மைத் தாங்கும் பேராற்றலைக் கொடுத்த செயலை விட்டுணு அறிந்து, அவ்விறைவன் முப்புரதகனம் செய்த காலத்து அன்பின் மேலீட்டினால் இடபரூபங் கொண்டு தாங்கினர்.

அக்காலே, சிவபெருமானைத் தாங்குவதற்குத் தாமொருவரே வல்லுநர் என்று திருமால் இறுமாப்புற்றனர். பத்திவலையிற் படுவோராகிய சிவபெருமான் மாயன் கொண்ட மமதையை அறிந்து, அதை நீக்கும் பொருட்டு ஒரு திருவிளையாடல் புரிந்தனர். அதனால், செவி வாய் நாசிகளிலிருந்து இரத்தம் பெருக, கண்கள் பிதுங்க, அவ்விடபம் அமலனைத் தாங்க ஆற்றல் அற்றதாய்க் கால்களை மடித்துப் பூமியில் விழுந்தது. அப்பொழுது தேவர்கள் துதித்தார்கள். பரமசிவனுர் இறங்கியருளினுர். விட்டுணுவாகிய இடபம் சிவபெருமானை வணங்கி, "தேவரீருக்குத் தருமதேவதையாகிய இடபமொன்றிருப்பினும், யானுந் தேவரீரைத் தாங்குதற்கு வலியைத் தந்தருளுக" என்று பிரார்த்திக்க, இடபமாகும் வரத்தையும் வலிமையையுங் கொடுத்து ஊர்தியாகக் கொண்டு ஆரோகணித்தருளினுர். இது உபதேசகாண்டத்தும், காஞ்சிப்புராணத்தும் கூறப்பட்டது.

இதனை, † "திரியு முப்புரந் தீப்பிழம் பாகச் செங்கண் மால் விடை மேற்றிகழ் வானை" எனவும்,

‡ கடகரியும் பரிமாவுந் தேருமுகந் தேறாதே
யிடபமுகந் தேறியவா றெனக்கறியி யியம்பேடீ
தடமதில்க ளவைமூன்றுந் தழலெரித்த வந்நாளி
லிடபமதாய்த் தாங்கினுன் றிருமால்காண் சாழலோ.

எனவும் வரும் திராவிட சுருதிகளாலும் விட்டுணு இடபமாய்த் தாங்கிய சரித்திரம் உணர்ந்துகொள்க.

* சுலோகபஞ்சக மொழிபெயர்ப்பினும்,

முப்புர மிறப்புழி முகுந்தப் புத்தேண்
மால் விடையாகி ஞாலமொடு தாங்கலின்
.........................................
பசுபதிப் பெயரிய தனிமுதற் கடவு
ளும்பர்க ளெவர்க்கு முயர்ந்தோ
னென்பது தெளிக வியல்புணர்ந் தோரே.

என்று கூறப்பட்டுள்ளது.

---

† சுந்தரமூர்த்திநாயனுர்.

‡ மாணிக்கவாசகர்.

* சுலோகபஞ்சகம் என்பது சிவபெருமானது மகிமையை யாவரும் எளிதில் உணர்ந்துகொள்ளும் பொருட்டு அரதத்தாசாரியரால் இயற்றப்பட்டது. மொழிபெயர்த்தவர் ஸ்ரீ சிவஞானமுனிவர்.

சிவபெருமான் தருமதேவதையையும், ஞானத்தையும், திருமாலையும் இடபமாகக் கொண்டது தருமரூபமும், தருமபரிபாலகரும், ஞானமயமானவரும், விட்டுணுவுக்கு மேலானவரும் தாம் என்பதை அறிவித்த உண்மையாகும்.

அறனுரு வாகிய வானே றூர்தல்
இறைவ னியானென வியற்று மாறே.

என்றார் பட்டினத்தடிகளும்.

தியானம்

ஸவ்யே ஶ்ருங்கே வக்ரதுண்டாங்கித கடககரம்
தேஹபாதே நிஷ்டஹஸ்தம்
வாமஸ்யாபஞ்ச வக்ஷ வாமகாஸந நமே
டங்கக்ருஷ்ணம் ததானம்।
ப்ருஷ்டஸ்தாக்ஷம் ப்ரஸந்நம் த்ரிநயநஸஹிதம்
ஶஶிவேணீ கிரீடம்
வாமே கௌர்யா ஸமேதம் ரஜதகிரிஸமாநா
தம் வ்ருஷாரூடமீஶம் ॥

---

# சிவநாமபஜனம்

[கோடிமங்கலம் சிவஸ்ரீ ம. விசுவநாதசிவாசார்யர் அவர்கள் எழுதியது.]

1. பக்தியில்லாதவிடத்துச் சிவபெருமானை அடைதல் ஒருவாற்றானும் கூடாது. இடையறாது முறுகி வளரும் அன்பின் முதிர்ச்சியிலே சிவம் விளங்கும். ஆதலால், அன்பும் சிவமும் இரண்டற அபேதமாய் நிற்கும். இந்தப் பக்தியானது பல பிறப்புக்களிலே பிரயோசனம் கருதாது செய்த புண்ணிய மிகுதியினாலேயே வரும். சிவபெருமானுடைய திருவருளின்றி இவ்வன்பு ஒருவாற்றானும் நிகழாது.

சிவதத்துவவிவேகம்

தவ ஸ்ரீபாதாப்ஜே யதவி ஹ்ருதி பக்திர்ந ஸஹஜா
நிஹந்த்ரீ துஃகாநாம் நிகமபரிபாஷாதிகஸதி:।
விநா பாதௌ ந்ருணாம் ஶ்ரமஸதஸஹஸ்ரேஷு விஹிதை:
ந ஸா ஶ்ரேயோமார்த்ரம் பத ஸஹஸ்ரவிந்தம் ந லபதே ॥

2. உலகத்திலே சர்வசிரேஷ்டன் எதை அனுஷ்டிக்கிறானோ அதையே வேதப்பிரமாணமாகக் கொண்டு, சர்வஜனங்களும் அனுஷ்டிக்கவேண்டியது.

கீதை

यद्यदाचरति श्रेष्ठस्तत्तदेवेतरो जनः।
स यत्प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते॥

3. மஹாவிஷ்ணுவானவர், விபூதி ருத்திராக்ஷதாரியாக இருந்து சிவோபாசனை செய்தார்.

[illegible]
[illegible] जटी [illegible]।
[illegible]
[illegible]॥

4. எந்தப் பரமேசானிடத்தில் பராசத்தி லயித்திருக்கிறளோ, அவரே நமஸ்கரிக்கத்தக்கவர். அவரே எனக்கு அபயப் பிரதானம் செய்யத்தக்கவர். பரமேசானலே எந்தத் தேவர் பூஜிக்கப்பட்டிருக்கிறார்? ஒருவருமில்லை. எவர்களாலே ஈசுரன் பூஜிக்கப்படாதவராக இருக்கிறார்? பூஜிக்காதவர் இல்லை.

சிவரஹசியம்

यस्यास्ति शक्तिस्सततं वन्दितव्यः [illegible]। कः पूजितस्स्याच्छशिशेखरेण नाराधितो [illegible] वा कैः॥

5. உருத்திரர் ஒருவரே.

சுருதி

एको हि रुद्रः।

6. மனிதருக்கு இன்பஞ்செய்ய விரும்பி எப்பொருள்களுக்கும் நித்தியமாய் உபக்கிரமமாய் உள்ளதை விருத்திசெய்தலினல் அந்தத் தேவர் சிவன் எனப்படுவர்.

துரோணபருவம்

समेधयति यन्नित्यं सर्वार्थानामुपक्रमम्।
शिवमिच्छन्मनुष्याणां तस्माद्देवः शिवः स्मृतः॥

7. ஹிம்ஸித்தல் எனப் பொருள்படும் ஹிம்ஸி தாதுவினின்று ஸிம்ஹசப்தம் எழுத்து நிலை மாறுதலினல் எய்தினற் போல, இச்சித்தல் எனப் பொருள்படும் வச தாதுவினின்று சிவசப்தமும் எய்தியது.

हिंसिधातोः सिंहशब्दो वशकान्तौ शिवः स्मृतः।

அல்லது சமஸ்த மங்களத்திற்கும் இருப்பிடமானதாலே சிவனென்றும் கோஷிக்கப்படுகிறார்.

अथवाशेषकल्याणगुणैकनिधिरीश्वरः।
शिव इत्युच्यते सद्भिः शिवतत्त्वार्थवेदिभिः॥

8. வித்தைகளுக்குள் உயர்வானது வேதம்; அவ் வேதத்துள்ளும் உயர்வானது ஸ்ரீருத்திரம்; அவ் வுருத்திரத்துள்ளும் உயர்வானது ஸ்ரீபஞ்சாக்ஷரம்; அதிலும் உயர்வானது சிவ என்னும் நாமம்.

அபியுக்தர்

விஃ்யாஸு ஶுதிரு-க்ரஷ்டா ரு-ஜெ-காஃஶ நீ ஶு-தள।
தத்ர வஞாக்ஷரீ தஸ்யாம் ஶிவ ஐத்யக்ஷர உயழ॥

9. ஸர்வ ஆகமங்களிலும் வேதங்களிலும் மற்றும் சாஸ்திரங்களிலும் ஸாரபூதமாக உள்ளது சிவநாமம் ஒன்றே.

ஆகமத்தில்,

வெஷெஷ- ஸாரலிவா ஶஓ உஹ தஹ
ஶாஜெ ஷ- ஸாரஜிஃஜெவ ஶிவெதி நாஊ।

10. மஹரிஷிகள் முக்கியமான பரமசிவனுடைய பஞ்சாக்ஷரஜப பிரபாவத்தினாலே நிச்சயமான பரமேஸ்வரரூபத்தை அடைந்திருக்கிறார்கள். அவருடைய முகத்தில் சிவன் பராசத்தியோடு கூடினவராக இருந்து நிருத்தம் செய்கிறார்.

உ-வஶஜபஜவதொ உ-நீஶ்வராஃ ஸத்யஜெவ வாரஜெஶ்வ ரொஹவெசு। தஸ்ய வதீகஉஜெ ஸஃாஶிவஃ ந்ருத்யதிஷு வாரஜெஶயா ஸஹ॥

11. (யுத்த நிக்கிரக விஷயத்தில்) யுத்தத்தில் பிரவேசித்த தன் பக்தனின் முன்னே நின்று, சத்துருவதம் செய்பவர் சிவபெருமான் ஒருவரே. யுத்தத்திற்கு வரும் சத்துருவினுடைய சைந்நியம், வீரியம் இவைகளை வெகுதூரத்திலேயே பங்கப்படுத்துகிறவர் சிவன் ஒருவரே.

வேதம்

சுஜெ ஹவயாயவ ஃ-ஐரெ வயாயவ।

12. "இப்பொழுது நடந்துவரும் யுத்தத்தில் உன் முன்னே தோன்றிப் போர் புரிபவர் அந்த மஹாருத்திரரே என்று தெரிந்துகொள்" என்று ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாவினாலே அருச்சுனனுக்குச் சொல்லப்பட்டிருக்கிறது.

பாரதம்

யஷு- தெஹ்ய ஹதொ யாதி ய-ஜெ ஸாவூத-வஷ்ரிதெ।
தம் விஃி ரு-உம் களஜெய।

13. அருச்சுன! முன்னாலேயே அந்தப் பரமசிவனாலே கொல்லப்பட்ட சத்துருக்களைப் பிறகு நீ அடித்து ஜயித்தவனாக இருக்கிறாய். உன்னாலாவது ஒன்றுமில்லை. ஆனதால், அளவிடக்கூடாத பிரபாவம் உள்ளவனும், தேவர்களுக்கெல்லாம் மேலானவனும், உமாஸஹாயனும்,

விசவேசனும், சத்துரு சங்காரியும், அவ்வியயனுமான அந்தப் பகவானை நியமத்துடன் பஜனை புரிவாயாக என்று கிருஷ்ணரால் அருச்சுனனுக்கு உபதேசிக்கப்பட்டிருக்கிறது.

பகவந்கீதை

[illegible]।
[illegible]।
[illegible]॥

ஆதலால், "[illegible]।" என்றபடி இக் கலியில் வித்துவாரங்களையும் உபத்திரவங்களையும் நிவிர்த்திக்கவேண்டில், பக்தியோடு கூடிய சிவநாமபஜனத்தைக் காட்டிலும் வேறு கதியில்லை. ஆதலால், எல்லாரும் சிவநாமபஜனம் செய்வீர்களாக.

---

## "கும்பாபிஷேக முஹூர்த்தம்"

திருச்செந்தூர் ஸ்ரீ சுப்பிரமணியசுவாமிக்கு நாளது விக்கிரமவருஷம் உத்தராயணம் தைமீ சவ சுக்கிரவாரமும் சதுர்த்திக்குமேல் பஞ்சமித்திதியும் பூரத்திற்குமேல் உத்தர நக்ஷத்திரமும் கூடிய அன்று இரவு நாழிகை 55-க்கு மேல் 59-க்குள் தனுர்லக்கினத்தில் அஷ்டபந்தன கும்பாபிஷேகம் செய்வது உத்தமம் என ஷை தேவஸ்தான விதாயகர்த்தா ஸ்ரீ R. கிருஷ்ணசாமிசாஸ்திரிகள் நிர்ணயித்த முஹூர்த்தப் பத்திரிகையை ஷை தேவஸ்தான Executive Officer ஸ்ரீ G. K. பகவதி அவர்கள் B. A. B. L., எனக்கு அனுப்பி என் அபிப்பிராயத்தைக் கேட்டிருக்கிறார்கள்.

ஐய! உங்கள் நிருபமும் சாஸ்திரிகள் நிர்ணயித்த முஹூர்த்தப்பத்திரிகையும் வரப்பெற்றுனந்தித்தேன். சாஸ்திரிகள் நிர்ணயித்த முஹூர்த்தம் சாஸ்திரசம்மதம். அது மிகவும் பொருத்தம். அதுவே எனக்கும் சம்மதம்.

மேலும், உலகப் பெரியோர் அபிப்பிராயங்களை யான் வேண்டிக்கொள்கிறேன். ஆகமசாஸ்திர பண்டிதர்களே! நீங்கள் உங்கள் அபிப்பிராயங்களைச் "சைவசாஸ்திர பரிபாலனன்" வாயிலாய் வெளியிட அன்பன் யான் வேண்டிக்கொள்கின்றேன்.

சிவசூரியநாராயணபிள்ளை,
இட்டமொழி பஞ்சாங்க கணிதர்.

---

# ஸ்ரீ விஷ்ணுவின் ஆலயமும், சைவரின் திருப்பணியும்

[சண்டனூர்: சிவஸ்ரீ இராமநாத சிவாசாரியர் அவர்கள் எழுதியது.]

சாக்ஷான் மோக்ஷ பலப் பிரதான சத்தனாகிய பரமேச்வர பூஜாபலத்தினாலே ஜகத்தைக் கர்த்திருத்துவம் பெற்ற மஹா விஷ்ணுவானவர், ஆஸ்திகமதத்தவரெல்லோராலும் ஆராதிக்கத்தக்க திவ்ய பாலனமூர்த்தி என்பது மறுக்கப்படாத தொன்றே. சிவாகமங்களிலே விஷ்ணுப் பிரதிஷ்டாவிதி கூறப்படுவதினாலே ஹரதத்தசிவாசாரியஸ்வாமிகளும்,

‘ஶங்கஸிம்ஹஸத்ருஶிரம் வராஹவபுஷம் வாஸாம்பவேஜாநுஸம்ஹிதே
வக்த்ரே பவேத்யயா ஸ்ருஷ்டம் தாம் நாயம் ஶிரோந்தஸம்ஹிதே।
ப்ரியா வாப வேதிஜ்யோதிஷ ஸத்தம் ஹம்ஸஸ்வரூபம் விதிம்...’

பன்றியுருக்கொண்ட விஷ்ணுமூர்த்தி பரமேசுவரனுடைய பாததரிசன காரியத்தில் உண்மை புகன்றதால் அவரைப் பரமேசுரன் தயையினாலே ஸமஸ்த உலகிற்கும் நாதனாகவும், திருமுடிதரிசன விஷயத்தில் ஹம்ஸ உருக்கொண்டு சென்று பொய் புகன்ற பிரமனை எப்பொழுதும் அபூஜ்யனையாகவும் செய்தாரென்றும் கூறுவதால் பிரமதேவர் எப்பொழுதும் அபூஜ்யரென்றும், விஷ்ணுமூர்த்தி எப்பொழுதும் பூஜ்யரென்றும் பெறப்படுவதினாலும், “திருமாலுக் கடிமைசெய்” என்று நமது மூதாட்டி கூறுவதினாலும், சிவனுடைய நான்குவித சத்திகளில் புருடசத்திரூபனான பெருமாள் ஒவ்வோர் அவதாரத்திலும் சிவபூசை செய்து அநுக்கிரகம் பெற்றாரென்பதோடு, நரநாராயணர்களுக்குள்ளே நரனுடைய மறுஜனனமே கண்ணப்பரென்பதனால் நாரணனும் அக் கண்ணப்பனோடொப்ப அவர் பணியையே தாமும் செய்யவேண்டுமென்றோ, வேறெதனாலோ நேத்திர கமலார்ச்சனை செய்து, அடியார்களுக்குள்ளே தலைசிறந்து விளங்குவதனாலும், சிவனடியார் திருத்தொண்டும் சைவர்கட்கு உடன்பாடேயாதலாலும், ஸ்ரீ மஹாவிஷ்ணுவுக்குத் திருப்பணி செய்தலும் சைவர்களுக்குடன்பாடேயாம்,

ஆனல், அந்தக் காரியம் விதிவழியாயும், தம் நிலைமைக் கேற்றதாயும் செய்யவேண்டுமென்பதே அறிஞர் கடனும். எல்லா மதங்களையும் சோபானமாகக் கொண்ட நமது சைவ மதம் போல எந்த மதமுமில்லை என்னலாம். என்னை? சைவர்கள் ஏகாதசிவிரத மநுஷ்டிப்பார்கள; கண்விழிப்பார்கள்; பாரணைசெய்வார்கள். எந்த வைணவராவது சிவராத்திரி விரத மிருந்ததுண்டா? கண்விழித்ததுண்டா? எத்தனையோ சைவர்கள் விஷ்ணு ஆலயங் கட்டினர்கள். இனியுங் கட்டுவார்கள். எந்த வைணவராவது சிவப்பணி செய்வதுண்டா? அரசனே எல்லோரையும் ஆளமுடியும். அடிமைகள் தம்மையே பேணலாம். அரசமதமான சைவமே எல்லா மதங்களையும் பேணும். சைவமதத்திலே பிறந்து, அதிலே தவழ்ந்து, அதிலே இருந்து, விபூதி உருத்திராக்ஷங்களையே அணிந்து, ஐந்தெழுத்தை நினைந்து, அரனடிக்கே அன்பு செலுத்துகின்ற சைவர்கள், விஷ்ணு ஆலயங் கட்டவேண்டுமானல், விதிவழியாகவும், தம் மதானுசாரமாகவும் கட்டி முடித்து, சிவாகமவழி பிரதிஷ்டை செய்வித்து, அவ் விதிப்படியே பூசை விழாக்கள் நடத்த ஏற்பாடு செய்து, அந்த மூர்த்திக்கும் விபூதி உருத்திராக்ஷங்களை சாத்திவைத்தும், அத்திருச்சன்னிதியிலே விபூதிப்பிரசாதமே வழங்கும்படி செய்தும் அந்த மூர்த்தியைச் சைவப்பெருமாளாகவே வணங்க வேண்டுமேயன்றி, வடகலைப் பெருமாளாகவோ, தென்கலைப் பெருமாளாகவோ, வைகானஸப் பெருமாளாகவோ, பாஞ்சராத்திரப் பெருமாளாகவோ, சுமார்த்தப் பெருமாளாகவோ வணங்குதல் அறிவுடைய செயலன்றும். ஒரு வடகலை வைணவர் தமது பெருமாளுக்குத் தென்கலை நாயமிட ஒப்பார். அதுபோலவே தென்கலையார் வடகலை நாமத்தை அணிவிக்கமாட்டார்கள். சைவர்களாகிய நாம் நமது சைவப்பெருமாளுக்கு விபூதி புண்டரங்களையும், உருத்திராக்கமாலைகளையும் உபயோகப்படுத்த என் தயங்கவேண்டும்? அதற்குப் பிரமாணமில்லையென்ரு? வைணவர்களிடத்திருந்து பீதி மேற்கொண்டா? அநுஷ்டானமில்லையென்ரு? சாஸ்திரமில்லையென்ருல் அடியில் வரும் பிரமாணங்களை நோக்குக.

## பரபக்க நூல்கள் (வைணவநூல்கள்)

நம்மாழ்வார் திருவாய்மொழியில் "கரிய மேனிமிசை வெளிய நீறு" என்றும், "தவளப் பொடிகொண்டு நீறிட்டிடுமின்" என்றும், முதலாயிரத்தில், "காப்பிட வாராய்" "அக்கு வடமுடுத்து" என்றும், ஷை திருவாய்மொழியில் "உடையார்ந்த வாடையன் கண்டிகையன்" என்றும், ஷை நான்காம் பத்தில் "நீறுசெவ்வே யிடக்காணி னெடுமா லடியா ரென்றோ" "மாயன் றமரணி நீறு" என்றும், விஷ்ணுவுக்கு விபூதி உருத்திராக்ஷங்கள் கூறப்பட்டிருக்கிறன.

## பொதுநூல்கள்

### பஸ்ம ஜாபால உபநிஷதம்

"திருமால் ஸ்ரீ காசிக்ஷேத்திரத்தில் தென்றிசைக்கணிருந்து, விபூதி ருத்திராக்க தாரணமுடையராய் உபாசிக்கின்றனர்" என்றும்,

### காளிகா கண்டம்

[illegible]

[illegible]

[illegible]

(நாராயணமூர்த்தி பஸ்ம ருத்திராக்ஷதாரியாய் தபஸ் செய்தனர்) என்றும்,

### இராமாயணம்

[illegible]

(பொன்னிறமான கிருஷ்ணாஜினத்தைத் தரித்தவரும், விபூதி உத்தூளன விக்கிரகருமான ரகுபதியை) என்றும்,

### அத்யாத்ம ராமாயணம்

[illegible]

[illegible]

(சூர்ப்பனகை பஸ்ம உத்தூளன ஸர்வாங்கனான இராமனைப் பார்த்துக் காமவசமானாள்) என்றும்,

கூர்மபுராணம்

"கண்ணன்வெண் பூதிபூசிக் கண்டிகை மாலைசாத்திப்
புண்ணியத் திங்கள்வேணி யரனிரு பாதம்போற்றி" என்றும்,

பிரம்மாண்டபுராணம்

𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌜𑌿𑌨𑍋𑌤𑍍𑌤𑌰𑍀𑌯𑌾𑌂𑌸𑍋 𑌧𑍃𑌤𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌮𑌾𑌲𑌿𑌕𑌾𑌂 ।
𑌦𑌣𑍍𑌡𑌵𑌾𑌨𑍍 𑌜𑌪𑌿𑌵𑍇𑌷𑍋 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍 𑌉𑌦𑍍𑌗𑌿𑌰𑌨𑍍 𑌹𑌰𑍍𑌷𑌕𑌮𑍍𑌪𑌿𑌤𑌃 ॥

(வாமனமூர்த்தியும் விபூதி ருத்திராக்ஷமணிந்தார்) எனவும், சொல்லப்படுவதாலும் விஷ்ணு விபூதி ருத்திராக்ஷ தாரணரே.

இன்னும் கிருஷ்ணவிலாஸ காவியஞ் செய்த சுகுமாரகவியும் மூன்றாவது சர்க்கம் ௧௭-வது சுலோகத்திலே,

𑌤𑌿𑌲𑌕𑌂 𑌵𑍍𑌯𑌧𑌿𑌤 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌰𑌲𑌿𑌕𑍇 𑌰𑌜𑌸𑌾 𑌗𑍋𑌪𑌜𑌨𑍍𑌯𑌨𑌾𑌵𑌿𑌯𑌾𑌯 ।

(நந்தகோபன் மதுசத்துருவினுடைய [=கண்ணனுடைய] நெற்றியிலே பசுவின் சாணத்திலுண்டான தூளி [=விபூதி] யினாலே திலகத்தைச் செய்தார்) என்றும், இதற்கு வியாக்கியானம் செய்திருக்கிற இராமபாணிபாதரும், இது அமங்கல நிவிர்த்தியின் பொருட்டென்று கூறி, மேற்கோளாக

𑌗𑍋𑌮𑌯𑍋𑌦𑍍𑌭𑌵𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌦𑍋𑌷𑌹𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌯𑍇 ।

என்ற வாக்கியத்தையும் எழுதியிருப்பதாலும், நமது திருநாவுக்கரசுநாயனாரும் "நீற்றினை நிறைப் பூசி நித்தலா யிரம்பூக்கொண்டு" என்னும் தேவாரத்தில் விஷ்ணுவுக்கு விபூதி கூறியமையாலும் விஷ்ணுவுக்கு விபூதி சாத்தப் பிரமாணமில்லை என்பதில்லையாயிற்று.

வைணவர்களிடத்துப் பீதியினாலென்றால், அன்னவர்கள் பயத்தினாலே தாங்கள் விபூதியை விலக்கி நாமம் போட்டுக் கொள்ளாததினாலும், முத்திராதானம் முதலியவை பெற்று, அந்த மதப் பிரவேசம் செய்யாததினாலும் அதுவும் பொருந்தாது. வழக்கமில்லையென்றால் மலைநாட்டுத்தலங்களுள்ளே மங்களசாசனமும் பெற்ற திருவனந்தபுரம் விஷ்ணுக்ஷேத்திரந் தானே. இன்னும் சிராத்தாதி காலங்களிலே ஸ்மரிக்கப்படுகிற ஜநார்த்தனக்ஷேத்திரம் விஷ்ணுஸ்தலமல்லவா? திருவாங்கூர்,

கொச்சிஸ்டேட் விஷ்ணுஸ்தலங்களிலெல்லாம் திருநாமம் சாத்தப்படுகின்றதா? இலங்கை முதலான இடங்களிலுள்ள விஷ்ணுகோவில்களில் பெருமாளுக்குத் திருநாமம் இடுவதில்லையென்பதோடு திருச்சன்னிதிகளில் விபூதி கொடுக்கப்படுவதில்லையா? இராவணவிஜயத்திற்குச் சென்ற ஸ்ரீராமர் இலங்கையிற் பாடிவீடாகக் கொண்ட விஷ்ணு ஆலயத்தில் பெருமாளுக்கு விபூதி அபிஷேகம் செய்யப்படவில்லையா? இவைகளால் வழக்கமில்லையென்று சொல்லமுடியாது.

ஆகவே, சைவர்கள் தாங்கள் சிவமதஸ்தர்களுக்குப் பிறந்து, அம் மதத்திலே தீக்ஷைபெற்று, அதிற் கூறப்பட்ட விபூதி ருத்திராக்கங்களையே பூண்டும், வைணவ ஆசாரியர்களையும் அம் மதத்திற் கூறப்பட்ட முத்திராதாரணதி ஸம்ஸ்காரச் சடங்குகளையும் அந்த மதத்தின் அடையாளமான திருநாமக் குறியையும் விலக்கிவிட்டவர்களாயிருந்தும், சைவசாஸ்திரங்களைப் புறக்கணித்து, அதற்கு மாறாக வைணவசாத்திரங்களின் படியும் வைணவர்களைக் கொண்டும் விஷ்ணுவின் பணிபுரிவது உபயமதப் பிரஷ்டத்துவமாம் என்பதை உணரவேண்டும்.

வைகானஸக்காரர்கள் பாஞ்சராத்திரத்தை ஒத்துக் கொள்ளமாட்டார்கள். பாஞ்சராத்திரிகள் வைகானஸத்தை ஒத்துக்கொள்ளமாட்டார்கள். சுமார்த்தர்கள் செய்வதென்று வந்தால் முற் கூறப்பட்ட இரண்டும் இல்லையென்றுதும். இதற்கு அத்தாட்சி காரைக்குடி மடாலயமும் புதுவயல் கிருஷ்ணன் கோயிலுமேயாகும். சைவர்கள் விஷயத்தில் சைவாகமமே பிரமாணம். சைவர்களே ஆசாரியர்கள். காளையார்கோயிலி (திருக்கானப்பேர்)ல் இருக்கிற பெருமாளுக்குச் சிவத்துவிஜர்களே பூஜை செய்வதும் ஏகாதசியில் உத்ஸவம் செய்விப்பதும், இன்னும் திருவாலங்காடு, தென்குடித்திட்டை முதலிய இடங்களில் சைவப்பெருமாள் இருப்பதுமே அத்தாக்ஷி திருக்கண்ணமங்கை என்கிற விஷ்ணுக்ஷேத்திரத்தில் மஹோத்ஸவ காலத்தில் ஒருநாள் ஏதோ காரணத்தால் சிவாலங்காரம் செய்து திருவீதி வருவதுமுண்டாம். சிவாலங்காரமென்றால் விபூதிப்பட்டம் சாத்துவதில்லை. உருத்திராக்ஷம் சாத்துவதில்லை. இன்னும் கங்கை, பிறை முதலிய அடையாளங்களைக்

காட்டுவதில்லை. புஷ்பங்களை வழக்கத்திற்கு மாறாகத் திருத்தி அமைக்கிறதற்கே சிவாலங்காரமென்று பெயராம். இந்தக் குற்றத்திற்கே அன்று தினம் வைணவர்கள் பூர்ணகும்பம் பொலிய வைப்பதில்லையாம். திருவாய்மொழிப் பாராயணம் செய்வதில்லையாம். அன்னவர்களின் மதாபிமானம் இப்படியிருக்குமானால், வைகானஸ பாஞ்சராத்திரக் கோயில்கள் கட்டுகிற சைவர்களுக்கும் அவர்களுக்குமுள்ள வித்தியாசம் எவ்வளவு என்பதைக் கூறவேண்டுவதின்றாம். இக் காரணங்களால் நமது பெருமாளே சைவப்பெருமாள்தானென்பதும், "பிறைதங்கு சடையானை வலத்தே வைத்து" என்று திருமங்கையாழ்வாரும் பிறரும் கூறியதனாலும், "அரியலாற் றேவியில்லை யையனை யாறனார்க்கே" எனத் தமிழ்வேதம் கூறுவதனாலும், காந்தமென்று தொடங்கிக் கூறிய வடமொழிச் செய்யுளிலிருக்கிற ரங்கபர்த்து என்கிற பதத்திற்கு எறும்பிச்சீயர், புட்குழிச்சீயர் என்னும் வைணவாசாரியர்களே அரங்கநாதனுக்குப் பர்த்தாவாகிய சிவனென்று அர்த்தமெழுதியதாக இருப்பதாலும்,

ஸைவைகா ஶக்தி: பரமேஶ்வரஸ்ய...
போகே பவாநீ புருஷேஷு விஷ்ணு:।

போகத்திலே பவானியென்றும், புருஷனிலே விட்டுணு என்றும், இன்னும் காளி, துர்க்கை இப்படி நான்கான சக்தி பரமேசுவரனுடையதொன்றே என்று அறியப்படுவதாலும், அநந்தாசாரியரும்

ஹரேரேவ ஸ்த்ரீஶரீரே ஶாஸ்தாரம் ஸம்பாதிதவாந்।

இலக்குமிகாந்தனின் வநிதாசரீரத்திலே சாஸ்தாவை உண்டுபண்ணினதாகுமென்று கூறியிருப்பதாலும், ஒவ்வோரூரிலும் சாஸ்தாவை அரிகரபுத்திரனெனக் கூறப்படுதலாலும், விஷ்ணுவல்லபனென்கிற நாமாவளியினாலும் நமக்குத் தந்தையான பரமேசுவரனது சத்தியாகிய அரியே தாயென்பதும் பெறப்படும்.

இப்படியுள்ள நமது சைவத்திருத்தாயை வைணவர்களிடம் ஒப்புவிப்பது வீரமும் புகழுமுள்ள செயலாகாது.

சைவர்கள் சைவமார்க்கத்திற் செல்வதே கற்றதும் கேட்டதும் அவலமாய்ப் போதல் நன்றன்று என்பதற்கும், "கற்கக் கசடறக் கற்பவை கற்றபின் நிற்க வதற்குத் தக" என்ற திருக்குறளுக்கும், "செய்வன திருந்தச் செய்" என்கிற அம்மையாரின் ஆத்திசூடி நீதிமொழிக்கும் மாறுகாதது.

நிற்க, மேற்கூறப்பட்ட வைணவர்களோ தென்கலேயார், வடகலேயார், மஞ்சள்நாமக்காரர், கோபிசந்தனக்காரர், கரிக்கோட்டுக்காரர் என்றிப்படிப் பல பிரிவினர்களாயிருக்கிறார்கள். இறுதியிற் கூறப்பட்ட இருவர்களும் வடமர்களென்றும் இராயர்களென்றும் கூறப்படுவார்கள். இராயர்களுக்குள் விபூதி பூசுகிற பண்டிதர்களெனப்படுகிற ஒரு வகுப்பாரும் உண்டு. வடமர்களோ தாங்களே ஆதிவைணவர்களென்றும் திருநாமக்காரர்களெல்லாம் கௌதம, அகஸ்திய, பிருகு, ததீசி, கண்வ, தூர்வாஸ, நந்தியாதியர்களுடைய சாபவயத்தானே வந்தவர்களென்று

விப்ராணாம் தாக்ஷிணாத்யாநாம் ஶாபேநாஹதசேதஸாம் ।
ஶிவே ஹ்யஸதி ரூத்ராக்ஷே ஶ்ரத்தா கிஞ்சிஜ்ஜாயதே ॥

என்கிற பிரமாணம் காட்டிக்கொள்வார்களானாலும், ஒரு சாரார் சிஷ்டாசாரமென்று விபூதி தரிக்கமாட்டார்கள். ஒரு வகையார் கோபிபுண்டரத்தின்மீது உத்தூளனம் மட்டிலும் (திரிபுண்டரத்தை) இடுவார்கள். திரிபுண்டரமிடுபவர் வெகு சிலரே. இது இப்படியிருக்கும்போது சைவர்கள் கட்டுகிற பெருமாள்கோயிலே வைணவர்களுள் யாரிடத்தில் விடுவது?

கோயில் கட்டவேண்டுமென்கிற உத்தேசத்தை வெளியிட்டவுடனேயே அது வடகலேப் பெருமாளாகத்தானிருக்க வேண்டுமென்றும், வடகலே நாமம் அழகில்லே; தென்கலேப் பெருமாளாகத்தானிருக்க வேண்டுமென்றும், வைகானசபூசை வேண்டுமென்றும், பாஞ்சராத்திரபூசை விசேஷமென்றும், அதிற் செலவென்றும், இதிற் சிரமமில்லேயென்றும், அந்தப் பெரிய கோயில் அப்படியென்றும், இந்தக் கோயில் கட்டியவர் பெருகி வாழ்ந்தாரென்றும், இப்படித் தம் தம் கொள்கைகளைப் புகுத்தப் பல பேர்களும் செய்கிற முயற்சிக்குப் பகீரதப் பிரயத்தினமு மீடாகாதென்னலாம்.

இந்நிலையில் தம் நிலை தெரியாத சைவர்கள் நாம் யார்? நமது சாஸ்திரவழி எப்படி? நமது கடமையென்ன? நாம் செய்ய வேண்டியதெது? என்கிற விசாரமின்றி முற்கூறப்பட்டவர்களுக்குச் சிபார்சுசெய்கிற நிலையிலிருக்கிறது இந்தக் கலிகாலம்.

ஆனால், சைவப் பெருமாள்கோயில் ஏன் அதிகங் காணப்படவில்லையென்று சிலர் சந்தேகிக்கலாம். இதற்குச் சைவர்கள் சிவன்கோயிலே கட்டினார்கள்; விஷ்ணுவை அங்கு அமைத்தே பூசை செய்துவந்தார்கள்; விஷ்ணுவுக்குத் தனியாலயங் கட்ட வேண்டிய சந்தர்ப்பம் வரவில்லை [மலையாளராச்சியத்தில் சிவசத்தியே விஷ்ணுமூர்த்தி என்பதனாலோ வேறெதனாலோ சிவன்கோயிலில் அம்பிகையே யில்லாமல் வாமபாகத்தில் விஷ்ணுவைப் பிரதிஷ்டித்திருக்கிற சுசீந்திரம் போன்ற அநேகங் கோயில்களு மிருப்பதும், திருவனந்தபுரம் பத்மநாபஸ்வாமி மகாலிங்கத்தைப் பூசிக்கிற அமைப்பிலிருக்கிறதென்பதும் குறிப்பிடத்தகுந்தது] என்றும், பிறகு வைணவர்களே தங்கட்கு வேண்டி விட்டுணு ஆலயங் கட்டவேண்டுமென்று தனிகர்களைச் சிபார்சு செய்ய, தனவந்தர்களான சைவர்கள் சாஸ்திர விசாரமின்றி எப்படியுந் தர்மந்தானே என்கிற சிறந்த நோக்கத்துடன் அவர்கள் இஷ்டம் போற் செய்துகொடுக்க அது வழக்கத்துக்கு வந்ததென்பதைவிட வேறு கூறுவதற்கில்லை.

ஆகையால், இனிச் சைவர்கள் விஷ்ணுகோயில் திருப்பணி செய்யுங்கால் தாங்கள் கட்டுகிற கோயில்களில் சைவசாஸ்திர அநுஷ்டானமுள்ள சைவப் பெருமாளாகவே விஷ்ணுமூர்த்தியை அமைக்கவேண்டுமென்றும், சிவனடியார்களில் முதன்மையுடைய சிவசத்திரூபரான அந்தப் பெருமாளுக்கு விபூதி ருத்திராக்ஷங்களே அணிகலன்களாக இருக்கவேண்டுமென்றும், இதுவும் பரபக்கநூல்களான திருவாய்மொழிப் பிரபந்தத்தாலும், பொதுநூலான வேதபுராண இதிகாசாதிகளாலும், ஸ்வபக்ஷநூலான தேவாராதிகளாலும் அநுமதிக்கப்பட்டதென்றும், அம் மகாவிஷ்ணுவின் திருச்சன்னிதியில் விபூதிப் பிரசாதமே அடியார்களுக்கு வழங்கப்படவேண்டுமென்றும் கூறி முடிக்கிறேன்.

திருக்கைலாய பரம்பரை திருவாவடுதுறை ஆதீனம் ஆளுடையார்கோயிலென்று வழங்குகிற திருப்பெருந்துறை க்ஷேத்திரத்தில் ஆதிகைலாசநாதசுவாமிக்கு நிருதி திக்கில் விளங்குகிற ஆதிகேசவப்பெருமாளுக்கு ஆதிகாலந்தொட்டே சைவர்கள்தான் பூசை செய்துவந்தார்கள். ஆளுடையார் கோவில் கட்டளை ஸ்ரீலஸ்ரீ சுந்தரலிங்கத்தம்பிரான் சுவாமிகள் காலத்தில் பெரியகோயிலில் பூசையின்றியிருந்த விக்கிரகங்களுள் ஏகாசியாருடன் கூடிய ஸ்ரீ விஷ்ணுமூர்த்தியின் உத்ஸவவிக்கிரகம் கொணர்ந்து வைக்கப்பட்டு, வைகுண்ட ஏகாதசியன்று புறப்பாடும் நடத்தப்படுகிறது. அவ்வுத்ஸவ மூர்த்தியின் ஹ்ருதயஸ்தானத்தில் ஒரு சிறிய சிவலிங்கவடிவம் இருக்கும் அருமை இன்றும் பார்ப்பவரின் மனதைக் கரையச் செய்விக்கும். இவ் விசேஷமூர்த்திக்குச் சின்னுட்களாக அதிகாரிகளின் முயற்சியில் வைணவரின் பூசையும், பழைய வழக்கத்துக்கு மாருகத் திருநாமச்சாத்துப்படியும் நடக்கிறது. சைவசித்தாந்த மஹாமடத்தின் ஆதீனத்திற்குட்பட்ட இதில் இப்படி நடப்பது சைவர்களுக்கு ஓர் பெருங்குறையே. இதை ஸ்ரீலஸ்ரீ மகாசன்னிதானமும், ஷை தேவஸ்தானம் டிரஸ்டி ஸ்தானீகம் ஸ்ரீமத் நமச்சிவாயத்தம்பிரான் சுவாமிகளும் கவனித்துப் பழைய வழக்கப்படி சைவப் பெருமாளாகச் செய்வதோடு, மூர்த்தியின் ஹ்ருதயத்திலுள்ள சிவலிங்க வடிவத்திற் திற்கும் பங்கமேற்படாதபடி செய்யவேண்டுமெனக் கேட்டுக் கொள்ளப்படுகிறது.

முற்காலத்திலே அரசர்களாலே செய்யப்பட்டுவந்த திருப்பணித்தொண்டு தற்காலத்திலே சிவதர்மபரிபாலன அரசர்களாக விளங்கும் நாட்டுக்கோட்டை நகரத் தனவைசிய சமூகத்தவர்களே செய்துவருகிருர்களாதலால், சைவப்பெருமாள் கோயில் ஆக்குதலாகிய இப் பெருந் தவத்தொண்டு, எந்த ஊரில் எவர்களுக்கு முதற்பரிசாகக் கிடைக்கப்போகிறதென்பதை மிக்க ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்.

---

# வித்தை

[சிவஸ்ரீ சி. சு. குமாரஸ்வாமிக்குருக்கள் அவர்கள், மதராஸ்.]

சிறியவனாகிய யான் வித்தை என்னும் விஷயத்தைக் குறித்து எழுத விரும்புவது முடவனொருவன் உயர்ந்த மரத்தில் உள்ள பழத்தை உண்ணுவதற்கு இச்சிப்பது போலாம். ஆயினும், "முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்" என்னும் முதுமொழியைச் சிரமேற்கொண்டு எழுதப்படும் விஷயத்தில் பிழைகள் இருப்பினும் ஹம்ஸக்ஷீர நியாயம் பற்றி, தோஷங்களை நீக்கிக் குணங்களை ஸ்வீகரிக்கும்படி பிரார்த்திக்கிறேன்.

உலகத்திலே உள்ள எல்லாச் சமயங்களையும் அங்கமாகக் கொண்டு, தான் அங்கியாய் இராசாங்கத்தமர்ந்து விளங்குவது வைதிக சைவசமயமேயாம். ஏனைய சமயங்களில் உள்ள பொருள்களெல்லாம் சைவசமயத்தில் அங்கங்களாகக் காணப்பட்டு, ஏனைய சமயங்களால் உணரப்படாத பொருள்களும் காணப்படும். மற்றைய சமயங்களில் உள்ள பொருள்கள் அனைத்தையும் சைவசமயம் கொள்வது போலச் சைவத்தில் உள்ள பொருள்கள் அனைத்தையும் ஏனைச் சமயம் ஒன்றேனும் கொள்வதில்லை. ஆகையினாலே மற்றைச் சமயங்கட்குச் சைவ சமயம் தோல்வி அடைவதில்லை. இப்படிப்பட்ட சிறப்பான சைவமதத்திற்குத் தகுந்த பிரசாரமின்மையால் அது நாளுக்கு நாள் க்ஷீணமடைந்துவருகிறது. மேலும், சிவாசாரிய வர்க்கத்தைச் சேர்ந்தவர்களாகிய நம்மவர்கள் அநேகர் தம் மதாபிப்பிராயத்துக்கு மாறானவைகளைச் செய்கிறார்கள். அதற்குக் காரணம் வித்தையை நன்கு அப்பியசிக்காததே.

வித்தை என்றாலும் கல்வி என்றாலும் ஒக்கும். ஒருவன் நல்ல கல்வியறிவுள்ளவனாயிருப்பின் அவன் வருணாச்சிரமவிதிப்படி நடப்பான் என்பதிற் சந்தேகமில்லை. கல்வி அறிவினால் திர ஆராயும் சக்தி ஏற்பட்டு எல்லாச் சுகத்தையும் அடையலாம். வித்தையானது விநயத்தைக் கொடுக்கிறது. விநயத்தினால் சற்பாத்திரனாந் தன்மையை அடைகிறான். சற்பாத்திரனாந் தன்மையினால் தனத்தை அடைகிறான். தனத்தினால் தருமத்தையும் அதனாற் சுகத்தையும் அடைகிறான் என்று நீதிநூல் கூறுகின்றது. "கற்கை நன்றே கற்கை நன்றே—பிச்சை புகினும் கற்கை நன்றே" எனக் கூறப்பட்டதும் இதனை வலியுறுத்தும்.

ஒருவன் பொருள் இல்லாதவனாயிருப்பினும் கல்விமானாயிருந்தால், வேண்டும்போது அவ் வித்தையானது தனத்தைக்

கொடுக்கும். இதனால் தனத்தைக் காட்டிலும் கல்வியே உயர்ந்தது என அறிகின்றோம். செல்வத்தை அழித்துவிட முடியும். நாமாக அழிக்காவிட்டாலும் துஷ்டர்கள் அபகரித்துவிடுவார்கள். வித்தையை ஒருவராலும் அழிக்க முடியாது. கல்வியானது கீர்த்தியைக் கொடுக்கிறது. ஆசார்யனுக்கும் ஆசார்யனாக விளங்குகிறது. வித்தையானது பந்துஜனமாகவும், தேசாடனம் செய்யுங்கால் தெய்வமாகவும், இராஜாக்களின் சபையில் பொருட்கொடையும் பூஜையும் செய்விக்கிறதாயும் இருக்கிறது. வித்தையை எவனொருவன் அப்பியசிக்காமல் இருக்கிறானோ அவன் மிருகத்திற்குச் சமானமாகிறான்.

𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌨𑌾𑌮 𑌨𑌰𑌸𑍍𑌯 𑌰𑍂𑌪𑌮𑌧𑌿𑌕𑌂 𑌪𑍍𑌰𑌚𑍍𑌛𑌨𑍍𑌨𑌗𑍁𑌪𑍍𑌤𑌂 𑌧𑌨𑌂
𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌭𑍋𑌗𑌕𑌰𑍀 𑌯𑌶𑌸𑍍𑌸𑍁𑌖𑌕𑌰𑍀 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌗𑍁𑌰𑍂𑌣𑌾𑌂 𑌗𑍁𑌰𑍁𑌃
𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌬𑌨𑍍𑌧𑍁𑌜𑌨𑍋 𑌵𑌿𑌦𑍇𑌶𑌗𑌮𑌨𑍇 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌪𑌰𑌾 𑌦𑍇𑌵𑌤𑌾
𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌰𑌾𑌜𑌸𑍁 𑌪𑍂𑌜𑍍𑌯𑌤𑍇 𑌨𑌹𑌿 𑌧𑌨𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌹𑍀𑌨𑌃 𑌪𑌶𑍁𑌃॥

அரசனுக்குத் தன் தேசத்திற்றானே சிறப்புண்டு. வித்தையுடையோனுக்கு அவன் சென்றவிடமெல்லாம் சிறப்புண்டு. ஆதலினாலே இராஜாவினும் வித்தையுடையோனே சிறப்பு மிகவுடையவன். ஒருவயிற்றுதித்தோருள்ளும் ஒருகுடிப் பிறந்தோருள்ளும் கற்றவனே சிறப்புடையன். அரசனும் கற்றவன் காட்டிய வழியிலேயே செல்லவேண்டியவன். செல்வப்பொருள் ஒருவனுக்குச் சம்பாதிக்கும் அந்த ஜன்மத்திற்றானே உதவுதலுடையது. கல்வி ஒருவனுக்கு எழுமையினும் சென்று உதவுதலுடையது. இத்தனை மாட்சியெல்லாமுடைய வித்தையினை நல்லாசிரியரை அடைந்து, பொருள் கொடுத்தும் உற்றவிடத்து உதவியும் இன்சொற் சொல்லியும் சந்தேக விபரீதமறக் கற்றல் வேண்டும். சந்தேகம் - இதுவோ அதுவோ என ஒன்றிலே பிறவாது நிற்றல். விபரீதம் - ஒன்றை மற்றொன்றாகத் துணிதல்.

யாம் ஓர் க்ஷேத்திரத்திற்குச் சென்றபோது அக்கோயிற் சிவாசாரியரைப் பார்த்து, "சுவாமீ! இங்கு அம்பாளுக்குக் கடிஹஸ்தமா? ஊருஹஸ்தமா?" என்று கேட்டேன். அதற்கு அவர் சிறிதாலோசித்துவிட்டு "நீங்கள் சொல்வதே நமக்குப் புரியவில்லை" என்று கூறிச் சென்றுவிட்டார். அவர் நல்ல கல்வியில்லாததாலேயே அப்படிச் சொன்னார். ஆகலினாலே அறியவேண்டுவனவற்றை அறிதற்குரிய சற்புத்திரனைப் பெற்ற

பிதா அவனை வித்வசபையிலே அவர்களிலும் மேம்பாடுற்று இருக்குமாறு கல்வியறிவுடையவனாக ஆக்குதல் வேண்டும். அதுவே பிதாவானவன் சற்புத்திரனுக்குச் செய்யவேண்டிய உபகாரமாம்.

சிவாசாரிய மரபினர்கள் தம் பிள்ளைகட்கு நிகண்டு, காவியம், வியாகரணம், தருக்கம் முதலிய சாமானிய வித்தைகளையும், விசேஷவித்தையாகிய சைவாகமத்தையும் படிப்பித்தல் வேண்டும். மேலும், அவர்களுக்குத் தமிழினும் நிகண்டு, இலக்கியம், இலக்கணம் முதலியவற்றையும், தமிழிலுள்ள சித்தாந்த நூல்களையும், தேவாராதிகளையும் பயிற்றுதல் வேண்டும். இங்ஙனம் சமய நூல்களை நன்றாகச் சொல்லிவைத்து அவர்களைச் சிவபக்தியுடையவர்களாகச் செய்தல் வேண்டும்.

சைவ முதனூல்களைச் சற்குரு முகமாகக் கேட்டல், சிந்தித்தல் செய்யாதொழியின் சிவபெருமானை உணர்ந்து, மனம் வாக்குக் காயங்களினால் சத்திய பக்தியோடு அவரை வழிபட்டுச் சனனசாகரந் தீர்ந்து நற்கதி அடைதல் கூடாது. அங்ஙனம் கற்றல், கேட்டல் செய்யினும் சிவபெருமானை வழிபடாதொழிந்தால் அந்த வித்தையாற் சிறிதேனும் பிரயோஜனமில்லை.

கல்லார் நெஞ்சி
னில்லா னீசன்
சொல்லா தாரோ
டல்லோ நாமே. (திருஞானசம்பந்தர் தேவாரம்)

கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின். (திருக்குறள்)

ஆதலினாலே சிவநிந்தை, குருநிந்தை, சிவனடியார்நிந்தை, வேதாகமநிந்தை, கொலை, களவு, புலானுண்ணல் முதலிய பாவங்களை ஒழித்து, சிவத்தியானம், சந்தியாவந்தனம், பஞ்சாக்ஷரஜபம், சிவபூசை, வேதபாராயணம், சிவாலயசேவை, தீக்ஷாகுரு வித்தியாகுரு முதலிய பெரியோர்களை வழிபடுதல் முதலாகிய புண்ணியங்களுடையராய் நின்றாலும், இருந்தாலும், கிடந்தாலும், நடந்தாலும், எத்தொழிலைச் செய்தாலும் என்றும் சிவபெருமானுடைய ஸ்ரீ பாதகமலங்களையே நினைதல் வேண்டும். அங்ஙனம் அநுக்ரஹிப்பதற்காக லீலாதாண்டவ நிபுணனான பார்வதீசனைப் பிரார்த்திக்கின்றேன்.

---

# கோவையில்

# பெரியபுராண படன நிறைவுவிழா

இவ் விழா விக்கிரமஸ்ரீ ஆவணிமீ கஎவ (1—9—40) ஞாயிற்றுக் கிழமையன்று வைசியர் வீதியில் உள்ள வித்வான் கந்தசாமிமுதலியார் சைவப்பிரசங்க சாலையில் மிக விமரிசையாகக் கொண்டாடப்பெற்றது.

அன்று காலை 5 30 மணி முதல் 6 30 மணிக்குள் அமிர்தயோகத்தில் விநாயகருக்கு அபிடேக ஆராதனைகளும், அறுபத்துமூவர் வழிபாடும் நிகழ்ந்தபின், புராண படன உரையாசிரியர் சிவாநுபூதிச்செல்வர் C. K. சுப்பிரமணியமுதலியார் B A. அவர்களால் புராணத்தில் எஞ்சிநின்ற "என்று மின்பம் பெருகும்" என்ற இறுதிப் பாசுரத்திற்குச் சுமார் 45 நிமிட நேரம் பொருள் விரித்துரைக்கப்பெற்றுப் புராண படனம் நிறைவுசெய்யப்பெற்றது. 'உலகெலாம்" என்று நடேசப் பெருமான் எடுத்துக்கொடுத்த முதலாகிய சிபஞ்சாக்கரம் என்னத்தக்க அருள்மொழியை ஆசிரியர் புராண முதலிலும், "சோதிமுத்தின்" என்ற திருப்பாட்டின்கண் வைத்தருளிய வகையால் இடையிலும், இப் பாட்டின்கண் இறுதியிலும் வைத்து முடித்த அமைதியினையும்; இம் மூன்று திருப்பாட்டுக்களும் ஒரே யாப்பில் அமைந்த அமைதியினையும்; இத் திருப்பாட்டின் இறுதியும் புராணத் தொடக்கமும் ஒன்றேயாகி வருதலால் இப் புராணம் இடையறாத ஒரு வட்டவடிவமா யமைந்து புராணத்தின் இறுதி மீண்டும் தொடங்குதற்குத் தூண்டுதல் போல அமைந்த சிறப்பு அமைதியினையும்; தோற்றமுறையில் உலகெலாம் என்று தொடங்கிய இப் புராணம் இத் திருப்பாட்டினால் ஒடுக்கமுறையில்—உலகெலாம் நிலவி—எங்கும் புகழ் ஓங்கி—என்றும் நின்றது எனக் கீழிருந்து மேற் சென்று முடியும்படி வைத்த அமைதியினையும்; "ஒன்று" என்றதனை எண்ணுப் பெயராய்க் கொண்டு ஒன்றிலே செல்லும் காதலின் எனக் கொள்ளக்கிடக்குமாதலின், அவ்வொன்றாவது "ஒன்றே நினைந்திருந்தேன்...ஆளாம் அது" (காரைக்காலம்மையார் அற்புதத்திருவந்தாதி—II) என்ற திருவாக்கில் கண்ட ஒன்றும் என்பதனையும், இனி ஒன்று "ஒன்றியிருந்து நினைமின்கள்" (கோயில் திருவிருத்தம்—2) என்றபடி பொருந்துகின்ற என்றுகொண்டு சிவனோடும் அவனடியார்களோடும் ஒன்றுகின்ற காதல் என உரைக்க நின்றதனையும் எடுத்துக் கூறி, இவ்வாறு சாதன—சாத்திய மிரண்டும் கருதிக் கொள்ளவைத்த அமைதியினையும்; என்றும் பெருகும் இன்பமாவது "இன்பமே என்னுடை யன்பே" என்றபடி இன்ப உருவினனாகிய சிவபெருமான் ஒருவனிடமே உள்ளதென்பதனையும், மன்றுளார் புகழ்—அடியார் புகழ் என்று தனித்தனி கூட்டி யுரைக்க நின்ற அமைதியினையும்; அடியார்கூட்டத்தினுள் முதல்வராய்த் தில்லைவாழந்தணர்களுள்

ஒருவராய் இறைவர் நிற்கின்றனர் என்ற குறிப்புப்பட மன்றுளாரடியாரவர் எனச் சேர்த்துரைத்துவைத்த அமைதியினையும்; என்றும் எங்கும் என்றதனால் எல்லாக் காலத்தும் எல்லாவிடத்தும் நித்தியமாய் நிறைந்து நிலவி நின்றது என்று கொள்ளக்கிடக்கும் அமைதியினையும் இவை போன்ற பற்பல அரிய பொருள்களையும் விரித்துக் கூறிப் புராண அமைப்பினையும் சிறிது பேசி நிறைவாக்கினர்.

காலை 10 மணி முதல் 11½ மணி வரை இளையான்குடிமாறநாயனர் குருபூசையும் அவர் புராணம் வாசிப்பும் நடைபெற்றது. 11-45 மணிக்கு உரையாசிரியர் அவர்களுக்குச் சேக்கிழார் திருக்கூட்டத்து அடியார்களால் பாதபூசை செய்யப்பெற்ற பின் சேக்கிழார் நிலையத்தில் 12-30 மணிக்கு மாகேசுரபூஜை நடைபெற்றது. சுமார் 250 சாமியார்களுக்கும் அன்னதானம் நடைபெற்றது.

மாலை சரியாய் 3 மணிக்கு மகரதோரணங்களாலும் மணங்கமழும் பூம்பந்தல்களாலும் முற்றும் அலங்கரிக்கப்பெற்றிருந்த மண்டபத்தில் அநேக ஆதிசைவ சிவாசாரியர்களும், அடியார்களும், வித்வசிரோமணிகளும், துறவிகளாய மாதவர்களும் மற்றும் திவான்பஹதூர் C. S. இரத்தினசபாபதிமுதலியார், M. சம்பந்தமுதலியார் B. A B. L., மாஜி போலீஸ் டிப்டி சப்பரின்டென்டன்ட் சீனிவாசராகவாச்சாரியார்; C. P. நாராயணராவ் B. A. B. L. சீனிவாச ஐயங்கார் B. A. B. L., M. S. கணபதிஐயர் B. A. B. L., E. ஷண்முகமுதலியார் B. A., M. ஆறுமுகமுதலியார் B. A. L. T., பேரூர் கோனியம்மன்கோவில் தர்மகர்த்தாக்கள் முதலிய கனவான்களும் பெருங்கூட்டமான பெண்மக்களும் கூடியிருந்தனர் ஸ்ரீமத் ஞானியார்சுவாமிகள், ஈசானசிவாசாரியார், திருப்பனந்தாள் ஆதீன பண்டாரசந்நிதிகள், சிதம்பரம் முத்துக்குமாரத்தம்பிரான் சுவாமிகள், ராவ் பஹதூர் C. M. இராமச்சந்திரஞ்செட்டியார் B. A. B L., யாழ்ப்பாணம் சோமசுந்தரப்புலவர், வேலணைத்தீவு தம்பியப்பா, தாம்பரம் பூ. சமரபுரிமுதலியார், சென்னை S. முத்தையாமுதலியார் B. A. B. L, S. சச்சிதானந்தம்பிள்ளை B. A. L. T., ந. மு. வே. நாட்டார், உடுமலை நயினர் முகம்மது முதலிய பெரியார்களும், "சித்தாந்தம்" "நவசக்தி" முதலிய பத்திராசிரியர்களும் எழுதி யனுப்பியிருந்த ஆசியுரைகள பவானி வித்வான் ஸ்ரீ திருஞானசம்பந்தப்பிள்ளை அவர்களால் வாசிக்கப்பெற்றது. பின்னர் கோவை சேக்கிழார் திருக்கூட்டத்தார், கோவை சைவநன்மக்கள், செட்டிபாளையம் திரு. R. N. கல்யாணசுந்தரக் கவுண்டர், முன்னூர் திரு. இராமசாமிப்பிள்ளை, விவசாயக்கல்லூரி சைவப்பிரசங்க சபையார் ஆகியோர்களால் வாழ்த்திசைகள் அச்சிடப்பெற்று, புராண படன ஆசிரியருக்கு வாசித்துக் கொடுக்கப்பட்டன. பண்டிதர் ஆனையப்ப

முதலியாராலும், பவானி பண்டிதர் கு. குமாரசுவாமிப்பிள்ளையாலும் பெரியபுராணப் பெருமைபற்றிச் சுருக்கமாகச் சொற்பெருக்கு நிகழ்த்தப்பெற்றது. 4 20 மணி முதல் 6 30 மணி வரை யானையின்மேல் சேக்கிழார்பெருமானுரையும் பெரியபுராணத்தையும் எழுந்தருளுவித்துத் தேவாரகோஷ்டியுடன் திருவுலா சேவிக்கப்பெற்றது. 1917-ல் திரு. க. சதாசிவசெட்டியாரையா அவர்களால் தொடங்கிய பெரியபுராணபடனம் 1922 ல் நிறைவேறியபோதும் இதே யானையின்மேல் தான் உலாக் கொண்டாடப்பெற்றது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

மாலை சந்தியாவந்தனத்திற்கு ½ மணி நேரம் ஒய்வு விடப்பெற்று மீண்டும் சுமார் 7-15 மணிக்கு ஓர் பெருங்கூட்டம் கூடியிருந்தது. ஞானபீடமாகிய பழனியாண்டவரிடமிருந்து அத் தேவஸ்தான எக்ஸிகியூட்டிவ் ஆபீசர் J. M சோமசுந்தரம்பிள்ளை B. A. B. L., அவர்களால் அனுப்பப்பெற்ற திருவருட்பிரசாதங்களும் பட்டுவஸ்திரமும் வந்தனத்துடன் ஏற்றுக்கொண்டு, புராணபடன உரையாசிரியர் அவர்களால் பெரியபுராணத்தின் மொத்த தாத்பரியம் பற்றிப் பொதுவுரையாகத் திருத்தொண்டத்தொகை பற்றியும் நம்பியாண்டார்நம்பிகளின் திருவந்தாதிபற்றியும் அவ்வச் சரிதங்களால் விளக்கி, புராணஆசிரியர் வரலாறும், புராணச்சிறப்பும், அதன் பயனும், இப் புராணம் கோவையில் சுமார் 12 வருடங்கள் நிகழ்ந்த நிலைபற்றியும் 1¾ மணி நேரம் அனுபவநிலையில் மிக ஆர்வத்துடன் பேசப்பெற்று முடிவுறும் நிலையில் திருவருட்செயலேயெனக் குருபீடமாகிய திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீன மகாசன்னிதானம் அவர்களால் அனுப்பப்பெற்ற ஷை ஆதீனம் கருவூர்க் கட்டளைமடம் ஸ்ரீமத் குமாரசாமித் தம்பிரான்சுவாமிகளும் ஓதுவார்மூர்த்திகளும் விஜயம் செய்து ஆசிரியர் அவர்களுக்குப் பீதாம்பரம் சாத்தி, ஆசாரியபரம்பரைத் திருவருட்பிரசாதங்கள் தந்து ஆசீர்வதித்தனர்.

இப் புராணபடனத்தை முதலில் தொடங்கியதற்குத் துணையாய் நின்ற திரு. M. சம்பந்தமுதலியார் B. A. B. L., அவர்கள் 20 நிமிஷம் பேசியபின் சேக்கிழார் திருக்கூட்டத்தார் சார்பாகத் திரு. கோமதிநாயகம்பிள்ளை அவர்களால் நன்றி கூறப்பெற்றது. ஸ்ரீமத் தற்புருஷ சிவாசாரியர் அவர்களால் தீபாராதனை நிகழ்ந்து, பிரசாதவிநியோகங்களும் சந்தன தாம்பூலமும் வழங்கப்பெற்று, இறைவனின்னருளால் விழா இனிது முற்றுப்பெற்றது.

நா. ஆறுமுகம்.

குறிப்பு:—சோமவாரந்தோறும் "திருவாதவூரர்புராணம்" தொடங்க உத்தேசம்.

---

# மதிப்புரை

## ஆதிபுரத்து அற்புத வைபவம்

இது ஓர் கற்பனா சரித்திரமாகும். இதனைத் 'தமிழ்த்தொண்டன்' பத்திரிகையிற் பாகம் பாகமாக எழுதியவர் பஞ்சாங்க கணிதராயிருந்த பருத்தித்துறை பிரஹ்மஸ்ரீ சோ. வைத்தியநாத சாஸ்திரிகளாவர். இக்காலத்தில் இலக்கணவாசனையே தமிழ்நூலாராய்ச்சியே இல்லாத சிலரால் எழுதி வெளிப்படுத்தப்படும் நவீன கதைகள் போலாகாது, இனிய தூய வசனநடையில் திருக்குறள் ஆதியாம் உயர்ந்த நூன்மேற் கோள்களுடன் இச் சரித்திரம் எழுதப்பட்டுள்ளது. இந் நூலாசிரியர் அதிவிவேகி; சீரிய ஒழுக்கமுடையவர்; இவர் இளமையிற் பிரிந்தது துக்கத்துக்கிடமானதாகும். இந்நூலைத் தொகுத்து வெளியிட்டவர் பிரஹ்மஸ்ரீ இராமச்சந்திரக்குருக்களாவார். இதன் விலை சதம் 50. (அணா 8). பிரதிகள் வேண்டுவோர் ச. சோமசுந்தரஐயர், கலாநிதி யந்திரசாலை, பருத்தித்துறை (யாழ்ப்பாணம்) என்ற விலாசத்துக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம். 50 சத முத்திரை அனுப்புவோருக்குப் புத்தகம் தபாற்செலவின்றி அனுப்பப்படும்.

## வல்லிபுரம் மாயவப்பெருமாளின் மும்மணிமாலையும், போற்றிவிருத்தமும்

இத் தோத்திரங்கள் "ஸ்வர்ணாலயம் வல்லீபுரம் விஷ்ணோ க்ஷேத்ர த்வயம் ததா" என்று தக்ஷிணகைலாச மஹாத்மியம் புகழும் பொன்னாலயம், வல்லிபுரம் என்னும் விஷ்ணுக்ஷேத்திரங்கள் இரண்டனுள் ஒன்றாகிய ஸ்ரீ வல்லிபுரக்ஷேத்திரத்தில் வீற்றிருக்கும் மாயவப்பெருமாள்மீது பாடப்பட்டனவாகும். இவற்றை நீர்வேலிச் சைவப்பிரகாசவித்தியா சாலை அதிபர் ஸ்ரீ அருணாசலம் அத்தியார் அவர்கள் விரும்பியவாறு பாடியவர் புலோலி கிழக்கு பிரமஸ்ரீ சிவ. பஞ்சாக்ஷரக்குருக்களாவர். இவர் வேறும் அநேகம் தோத்திரநூல்கள் இயற்றியுள்ளார். பாக்கள் இனியன. விலை சதம் 15.

## முருகப்பெருமான் திருவூஞ்சற் பதிகம்

ஈழத்துக் கரவைப்பதியிற் கீழ்ப்பாகத்துள்ள நெடுங்கேணிப் பதியில் பெரியதம்பிரான் என வழங்கும் இறைவனார் ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும் முருகப்பெருமான்மீது பாடப்பட்டதாகும். இதனைக் கீழைக் கரவை திரு. வ. சின்னையா ஆசிரியர் அவர்கள் வேண்டுகோளின்படி திரு. வீ. வேலுப்பிள்ளை ஆசிரியர் அவர்கள் பாடியுள்ளார்கள். இந் நூலுக்கு நவாலியூர் ஸ்ரீமத் க. சோமசுந்தரப்புலவர் முதலியோர் சிறப்புப்பாயிரம் உதவியுள்ளார். இந்த நூலினால் இவ்விருவரும் கந்தசுவாமி மீதும், கந்தபுராணத்தின்மீதும் கொண்ட பத்தி வலிமை புலனாகின்றது. ஆசிரியர் இதுபோன்ற அரிய செய்யுள் நூல்களையும் வேறு நூல்களையும் எழுதித் தமிழுலகுக்கு உபகரிக்குமாறு எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்றோம். பிரதிகள் வ. சின்னையா ஆசிரியர், கரவெட்டி P. O., யாழ்ப்பாணம் என்ற விலாசத்திற்கெழுதிப் பெறற்பாலன.

---